[16th March 1961

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அங்கத்தினரை மாத்திரம் கவனிப்பதற்காகக் கேட்கப்படவில்லை. ஏழை மக்கள் கவனிக்கப்படவேண்டும் என்பதுதான் நோக்கம். ஆகவே, அங்கே கண் ஆஸ்பத்திரி இருக்கிறதே. அதில் பணம் கொடுத்தால்தான் சேர்ப்பார்கள் என்பதும்.....

MR. SPEAKER : தயவுசெய்து மிஷன் ஆஸ்பத்திரியைப் பற்றிக் கேள்வி கேளுங்கள் ?

SRI V. K. KOTHANDARAMAN : அந்த ஆஸ்பத்திரியில் ஐ டாக்டரோ அல்லது வெனிரியல் டிஸீஸ் டாக்டரோ கிடையாது. ஒரு ஆனரரி டாக்டர்தான் இருக்கிறார் என்ற காரணத்தால், மிஷன் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அங்கே பர்மனெண்டாக ஒரு ஐ டாக்டரையும் வெனிரியல் டிஸீஸ் டாக்டரையும் உடனடியாக நியமிக்க முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வெனிரியல் டிஸீஸ் டாக்டர் அங்கே இருக்கிறார். ஏழைகளுக்கு என்று கேட்க ஆரம்பித்து, தனக்கு இல்லை என்கிறார் அங்கத்தினர். அவர்கள் பணக்காரர்களோ என்னவோ ; அப்படியானால் அவர்கள் எப்பொழுது பணக்காரர் ஆனார், எப்படி ஆனார் என்று தெரியவில்லை. (சிரிப்பு).

*Removal of Sand heaps (Kanyakumari district)*

MR. SPEAKER : As the hon. Member Sri T. S. Ramaswamy, who gave notice of question No. 887 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*887 *Q*.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken by the Government to remove the sand-dune heaped in the villages of Puthenthurai and Kovalam in the Kanyakumari district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : At Puthenthurai, a major portion of the sand heap has already been cleared by the Public Works Department by utilizing a bulldozer. The Public Works Department has also been allotted sufficient funds to clear the sand heaps at Kovalam by using a bulldozer. In addition to removal of the sand heaps, steps have been taken to raise wind-belts, i.e., belts of trees and shrubs which will bind the sand and reduce the speed of the wind and thus prevent the formation of sand heaps.

*President's awards to teachers*

* 888 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் எத்தனை ஆரம்ப உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு என்னென்ன திறமைகளுக்காக ராஷ்டிரபதி விருதுகள் இவ்வாண்டு வழங்கப்பட்டன ?